# திருடர்கள் இராஜ்யம்




## தில்லை-வில்லாளன்

கிடைக்குமிடம் :


திராவிடன் பதிப்பகம்
P. B. No. 18 வேலூர் N. A.

முதற்பதிப்பு டிசம்பர் 1950




பதிப்பாளர் :
மறுமலர்ச்சி நூல் நிலையம்
18, ஆயலூர் முத்தையா முதலி தெரு,
சென்னை - 1.

விலை அணா 0-6-0.

அச்சிட்டோர் :
அன்பன் அச்சகம் சென்னை-1.

# கதையின் கதை!.....!

இடிந்த கோட்டையைப் பார்க்கிறோம்—ஏதோ ஒரு எண்ண அலை உள்ளக் கரையில் மோதுகிறது! சிதைந்த சித்திரத்தைக் காண்கிறோம்—நம் சிந்தனை வேலை செய்கிறது! பாழடைந்த மண்டபம், நம் கற்பனைகளுக்கு அடிப்படையாகும் சந்தர்ப்பங்கள் உண்டு. அப்படித்தான் சில செய்திகளை, தினத்தாள்களில் படிக்கிறபொழுது, நம்மையறியாமல் ஒரு விசித்திரக் கற்பனை நிழலாட்டம் போடும்.

திருடர்கள் இராஜ்யத்தை உண்டாக்குவதற்குள் நாம் பல இராஜ்யங்களுக்குள் நுழையவேண்டிய அவசியம் ஏற்படுகிறது......

சீமான்கள் இராஜயம்
பகுத்தறிவு இராஜ்யம்
ஆண்டி மண்டிலம்
திருந்திய இராஜ்யம்

இப்படிப் பல—காண்கிறோம் — கருத்துள்ளோர் இந்த இராஜ்யங்களின் முழு விவரத்தையும் அறிந்து கொள்ளட்டும்—அதற்காக ஒரு துளி முன்னுரைதான் இங்கு தரப்படுகிறது.

திருடர்கள் இராஜ்யம் "திராவிட நாட்டில்" வந்தது—இப்பொழுது சில இணைப்பு வேலையுடன் மீண்டும் வருகிறது—புத்தக வடிவில்! அந்தப் பணியை ஏற்று முடித்த பதிப்பகத்தாருக்கு என் நன்றி.

"திராவிட நாடு"
காஞ்சி.
15-11-50.

இல்லை - வில்லாளன்.

# திருடர்கள் இராஜ்யம்

## களவுக் கல்லூரி

கல்கத்தா, ஜுன் 24 வட கல்கத்தாவில், ஒரு திருடர் கூட்டம், ஊரிலுள்ள பிள்ளைகளைப் பிடித்துச் சென்று அவர்களை கள்ளர்களாக மாற்றுகிறதாம். அவர்கள் களவாடக் கற்பிக்கும் கல்லூரியே நடத்துகிறார்களாம். தேர்ச்சியடைந்த மாணவர்கள் பஸ், டிராம், இரயில் வண்டிகளில் 'ஜேபடி' செய்ய அனுப்பப்படுவார்களாம்.

## மாளிகையில் திருட்டு

இலண்டன், ஜுன் 24-ஒரு திருடன், மேரி இராணியார் மாளிகையினுள் புகுந்து திருடுகையில், தடுத்துப் பிடிக்க ஓடிவந்த இரு தோழி

மார்களையும் அடித்துக் காயப்படுத்திவிட்டோடி விட்டான். சந்தேகத்தின் பேரில் தோட்டக் காரன் ஒருவன் கைதிசெய்யப்பட்டுள்ளான்.

## நிறுத்திவிடுகிறேன் !

திருப்பதி ஜூன் 6-இருபத்திரண்டு ஆண்டு களாகத் திருட்டுத்தொழில் செய்து வந்த ஆசாமி, தனக்கு ஒரு பள்ளியில் பணியாள் வேலை கொடுத்து ஒழுங்காக இருக்கச் சொன்ன தின் பேரில் தன் பழைய தொழிலை நிறுத்தி விட்டான்.

## சாகவும் விடவில்லை !

சென்னை.........வறுமையின் காரணமாக, கடலில் விழுந்து சாக முயற்சித்த ஒரு பெண் ணின் பேரில் தற்கொலைக் குற்றத்தின் காரண மாக வழக்குப் பதிவாகி நடந்து வருகிறது.

மேலே உள்ளத் துண்டுச் செய்திகளைக் கண்டதும் இணைத்துப் படிக்கச் சொன்னது சிந்தனை—படிக்க, படிக்க சிந்தனை சுழல ஆரம்பித்து விட்டது!—ஒன்றுக் கொன்று சிறு துளியும் சம்பந்தமில்லாத அவை மிக நெருங்கித் தழுவிக்கொள்ள முயற்சி செய்தன. இந்தத் துணுக்குகளின் இணைப்பு எண்ணச் சுழற்சிக்கு ஒரு தூண்டுகோல்—அவ்வளவுதான்!—முழுக்க முழுக்கக் கற்பனை. அதுவும் ஏதோ ஒரு 'யுதியோபியாவில்'

நடப்பது போல......இது கனவுலகக் காட்சி, கருத்துள்ளோருக்காக!

செய்திகளைக் கொண்டு செய்த சித்திரம் அவைகளோடு தொடர்புடையனவாக இருக்கவேண்டிய அவசியமே இல்லை. ஆகவே, மனத்தில் மேய்ந்துவரும் எண்ணங்களைத் தூதாக்க இது ஒரு சிறுமுயற்சி......நினைவுக் கோட்டையை நிர்மாணிக்க அந்தச் செய்திகளே அடிப்படையாகின்றன.

# 1

கண, கண, கண.........

மணியடிக்கிறது—பூஜை ஆரம்பமாகிவிட்டது!

தீபாராதனைத் தட்டைத் தூக்கி நிறுத்துகிறான் பூசாரி...அவன் வாய் ஏதோ முணு முணுக்கிறது!

இருளே வா, வா
மருளே போ, போ
பொருளே வா, வா
அருளே தா, தா

பாடுகின்றனர், பெண்களும், ஆண்களும்! இருள் தேவிக் கோயிலிலே கூடியிருந்தனர். அவர்கள் தேசத்து மன்னன் சிங்காரம் அன்று வந்திருந்தான். அவன் மனைவி சிங்காரியும் பூஜையில் ஈடுபட்டிருந்தாள்.

பாட்டு முடிந்து, கொட்டு முழக்கம் நின்று, பூசாரியின் குரல் மட்டும் கணீரென்று ஒலித்தது. "இருள் மாதா எங்களைக் காப்பாற்று—பகல் வேண்டாம்,

வேண்டவே வேண்டாம் எங்களுக்கு—பரிவோடு கேட்கிறோம்! இரவே போதும்—இருட்டே சாலும்! தேவி, அயல்நாட்டார் அத்தனை பேரும் எப்பொழுதும் தூக்க மதுவருந்திக் கிடக்கும்படிச் செய். எங்கள் காலடியோசை கேட்காத செவிடர்களாகட்டும் அவர்கள். அன்னையே, கொள்ளையில் பாதியைச் செலவிட்டு உனக்கு கொடிகட்டி, விழா நடத்துகிறோம். இந்தத் திருடர்கள் இராஜ்யத்தைக் காப்பது உன் பாரமம்மா" என்று கூறிட, மற்றவர்கள் அந்த வரிகளை அப்படியே சொல்லிக்கொண்டு வந்தனர்.

மன்னன் சிங்காரம், பூஜைக்குக் குழுமியிருந்த கூட்டத்திற் கிடையிலே தோன்றினான்.

"என் நாட்டுத் திலகங்களே. களவுக் கண்மணிகாள்! அஞ்சவேண்டாம். நம் இருள்மாதேவி என்றும் கைவிட மாட்டாள். கண்ணிமைக்குள் புதைந்து கொண்டு வேடிக்கை காட்டும் விழிகளைக் கேட்டாலும் கொண்டு வரும் திறம்படைத்த தீரர்கள் உண்டு. வைத்தவன் சந்தேகிக்காமல், தோலிருக்க சுளை விழுங்குவதுபோல, பணம் சுருட்டும் சூரர்கள் இல்லையா, நம்மிடம்! நம் நாடு வாழும், நம்மவரை நலஞ் சூழும்!" என்றான்.

"நம்மை, இந்த நாட்டிற்குக் குடியேறும்படி விரட்டியடித்தவர்களே, அந்நிய இராஜ்யங்களிலே வாழும் வஞ்சகர்கள் தானே—ஆகவே அடிப்போம் கொள்ளை" என்று முழக்கினாள் சிங்காரி.

பூஜை முடிந்தது. எல்லோரும் கலைந்து சென்றனர்.

* * *

சிங்காரத்தின் தனியான அந்தப்புரம்—சிங்காரி எதிரில் அமர்ந்திருந்தாள்.

"திடீர்க் கவலை ஏன், என் திருட்டு ராஜாவே!" என்று கொஞ்சினுள் அவள்.

"கவலை யில்லையடி, கடுமையான யோசனை, என் கள்ளக் கட்டிக்கரும்பே, திருட்டுத் தேனே, கொள்ளை யடித்த கோமேதகமே!" என்று பதில் சொன்னுன், போதையேறிய கண்களோடு!

"என்ன யோசனை—எனக்குச் சொல்லக்கூடாதா?" என்று மீண்டும் கேட்டாள் அவள்.

"இல்லை—நான் இந்த தேசத்து மன்னனுக வருவதற்கு முன்னுலிருந்த நிலையை எண்ணினேன். அப்படியே எண்ணங்களில் என் நினைவைப் புதைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டேன்" என்றுன்.

"எனக்குக்கூட அந்தப் பழங்கதையைச் சொன்னதில்லையே! இப்பொழுதாவது சொல்லுங்களேன், கேட்போம்!" என்று வற்புறுத்தல் தொனிக்கக் கேட்டாள், அவன் மனைவி.

"சிங்காரி—அது விசித்திரமடி, விபரீதமானதடி—துயரத் தொடர்கதை! உனக்குச் சொல்கிறேன். என்னை இந்த இராஜ்யத்திற்கு ஏகச் சக்கிரவர்த்தியாக முடி சூட்டிவிட்டார்கள், என்னுடனே பிறந்து, என்னுலேயே வாழ்ந்தவர்கள். நான் இந்தப் பூமியிலே அடிவைக்கக்கூட அஞ்சினேன். பாவம், இந்த இராஜ்யத்தைப்பற்றி எண்ணுவது, என்றுகூட முதலில் நம்பினேன்.

திருடர்கள் இராஜ்யம்—ஒரு விசித்திரமான மண்டலம். அங்கு பகல், பதுங்கி வாழவேண்டிய

பொழுது. இரவு அவர்களின் இன்ப நேரம்! அதுவும் அமாவாசை அவர்களுக்கு வசந்த விழா. அவர்கள் கவலையைக் கடந்தவர்கள். துன்பத்தையே இன்பமாக மாற்றிடக் கற்ற மாயாவிகள். பணத்தைத் தேடப் பாடுபடமாட்டார்கள். அது அங்கு சட்ட விரோதம். பிற 'கஞ்சன் கன்பட்டுகள்' சேர்த்து வைத்திருப்பதை எடுத்து வருவது அங்குள்ளவர்கள் உலகத்திற்குச் செய்யும் பெருந்தொண்டு. கன்னமிடுவது, மதிலேறிக் குதிப்பது, கள்ளச் சாவி போடுவது, இருப்புப் பெட்டியை உடைப்பது, தூங்கும்பொழுது காதுகளில், கரங்களில் இருக்கும் அணிகளை, அவர்கள் விழிக்காமலே எடுப்பது போன்றவை அவர்களின் தியாகச் செயல்கள். அச்சத்தைச் துச்சமெனத் தள்ளிவைத்தவர்கள். அடி, உதையைக் கண்டும் கலங்காதவர்கள். 'இல்லை' என்ற பல்லவி பாடுவதிலே வல்லவர்கள்.

சிறையென்ற சிங்காரபுரிக்கு அடிக்கடி உல்லாசப் பயணம் நடத்துபவர்கள்—சிலநாள் தங்கியிருப்பார்கள், மறுநாளே கூடத் திரும்பிவிடுவர். மானம், மரியாதை என்ற 'மனித நோய்களை'க் கடந்த மகான்கள். இதயத்தை தசை நிலையிலிருந்து, கருங்கல்லாக்கிக்கொண்ட கண்ணியவான்கள்" என்று அடுக்கிக்கொண்டே போனான்.

"போதும், உங்கள் பிரதாபம்; ஆண்கள் மட்டும் அசகாய சூரர்கள் என்று ஆரவாரிக்க வேண்டாம். பெண்கள் திறத்தைப் பற்றிப் பேச வாய் கூசுகிறதா? வீட்டு வேலைக்கென்று புகுந்தாலும், கையில் கிடைத்ததையெல்லாம் மடியில் மறைத்துக்கொண்டு வரும் மனோன்

மணிகள் உண்டு. மாவரைக்கச் சொன்னால், அதிலே கொஞ்சம், கல் பொறுக்கச் சொன்னால், அதிலேயும் ஒரு கால்படியரிசி களவாடி வரும் கண்மணிகள்—இந்தக் களவாணி தேசத்துப் பெண்மணிகள்" என்று தன் பங்குக்குப் பேசி முடித்தாள்.

"நான் சொல்வதற்கு முன்னால் நீயே முந்திக்கொண்டாய். கள்வனுக்கேற்ற கள்ளி நீ! கண்மணி, கவலையை விடு. இந்தக் கள்ளத்தனத்தைக் கற்பிக்க ஒரு கல்லூரியை ஆரம்பித்துவிட்டேன். கல்லூரிக்கு பிரின்ஸிபால் யார் தெரியுமா? பட்டினியப்பர், 'பழைய பெருச்சாளி' என்று இந்த இராஜ்யத்திலே பிரக்யாதி பெற்றவர். மாணவர்கள் இந்த இராஜ்யத்திலே உள்ளவர்கள் மட்டுமல்ல வெளி தேசங்களிலிருந்தும் வலுக்கட்டாயமாகக் கூட அழைத்துவரப்படுவர். அவர்களுக்குரிய தகுதிகள்—வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பாடத்தில் எழுபது வாங்கியிருக்கவேண்டும். அனாதை பாடத்தில் ஐம்பதுக்குக் குறையக்கூடாது. அரைவயிற்றுக் கஞ்சிக்கும் வழியற்ற அரைப்பட்டினி, திக்கற்ற நிலை, தேற்றுவார் அற்ற போக்கு இப்படிப் பல பாடங்களில் தக்க மார்க்குகள் வாங்கியிருக்க வேண்டும்"-இப்படி சிங்காரம் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே சிங்காரி சிணுங்கினாள்.

"உங்களைப் பற்றிக் கேட்டால் உங்கள் கல்லூரி ஸ்தாபிதத்தின் பெருமையைப் பற்றிப் பேசிவிட்டீர்கள்!" என்று குத்தலாகக் கேட்டாள்.

"சொல்கிறேன்—நிச்சயமாகச் சொல்லிவிடுகிறேன், சொர்ணபுரிக் கொள்ளையிலே கிடைத்த சொகுசுக்கார சுந்தரி! அந்தக் காலத்தில் அரசனைக் கண்டுபிடிக்க;

யானையினிடம், மாலையும், மண நீர் நிறைந்த குடமும் தந்திடுவார்கள். அது யாரையாவது ஒருவனைப் பிடித்து நீரை ஊற்றி, மாலையை அணிவித்து அழைத்துவருமாம்! என்னைத் திருடர்கள் இராஜ்யத்திற்குத் தலைவனாகத் தெரிந்தெடுத்தது பசியெனும் யானைதான்.

சிங்காரம், இன்று கள்வர் தலைவன்—ஆனால் பல நாட்களுக்கு முன்னால் சாதாரண சிங்காரம்—அன்னக் காவடி! ஆம் சிங்காரி, உன் காதலன் தகரக் குவளையுடன் 'தருமம் தலைகாக்கும், தம்பிடி தந்திடுங்க' என்று பாட்டுப் பாடிய பண்டாரச் சிங்காரமாகக் கூட இருந்திருக்கிறான்.

நான், சின்னஞ் சிறுவயதிலேயே 'அக்கு தொக்கு' அற்ற அனாதயாகிவிட்டேன். ஆனால் உடலில் வலுவிருந்தது. உள்ளத்தில் உழைத்துச் சாப்பிட முடியும் என்ற உறுதி இருந்தது.

ஆகவே, வேலை, வேலையென்று எங்கெங்கும் தேடினேன்.

'இல்லை, இல்லை' யென்று அங்கங்கே சொல்லிவிட்டார்கள்.

அனாதை நான்—ஆகவே, அடிவயிறும் பரிதாபப் பட்டுச் சும்மா யிருக்கிறதா? 'ரெகுலர்' புரட்சியையே ஆரம்பித்துவிட்டது. கொஞ்சநாள் அடக்கிப் பார்த்தேன். முடியவில்லை. பசிக்காக, எதையும் செய்யத் தயாரானேன்.

பிச்சையேற்க என் மனம் இடந்தரவே இல்லை—கடைசியில் நிலைமை என்னை விரட்டிவிட்டது! ஆம்.

மானத்தை விட்டுப் பிச்சையெடுத்து, எனது நொந்த குடலுக்குத் 'தீனி' கொடுத்துவந்தேன், எனக்கே பிடிக்கவில்லை, இந்த போக்கு — என் செய்வது?

நான் தேடியெடுத்த பாட்டு—எனது பிச்சை வியாபாரத்தின் விற்பனைச் சரக்கு—என்னவென்று கேட்டால், சிங்காரி திடுக்கிடுவாய்! பிச்சைக்காரன் ஆனேனே, எச்சிலுண்ணும் நாய்போல் ஏங்கித் தவிக்கிறேனே, இச்சையுண்டு உழைக்க, ஆனால் ஏது உண்டோ உரைப்பீர், மச்சுகளில் வாழ்கின்ற மடையீர் கேளீர், எச்சிலுண்டு வாழ்வதற்கோ, ஈசன் தந்தான் இமயமுதல் குமரி வரை இந்த நாட்டை, கொச்சைக் கடவுள் விதியோ, நீவிர் பாரை ஏய்த்தது சரியோ...... இந்தக் கருத்துக்கள் அடங்கிய வரிகளை அடிக்கடி ஒரு உணவுக்கடையிலுள்ள "கிராமபோன்" பெட்டி அலறிக்கொண்டிருக்கும், அதை மனப்பாடம் செய்துவிட்டேன். பாட்டைப் பாடுவேன். பிச்சை கொடுக்க நினைப்பவரும், எச்சிலை உமிழ்ந்து விரட்டுவர். பசியைவிட, அந்தப் பாட்டிலே எனக்கு ருசி தட்டிவிட்டது. ஆகவே அந்தப் பாட்டை விடவே இல்லை. என் தொண்டை 'மக்கர்' செய்யும்—எதுகை, மோனை எதுவுமில்லாவிட்டாலும், அந்தக் கருத்துள்ள அடிகளை என் இச்சை போனபோக்கில் பாடிக்கொண்டேயிருப்பேன்.

ஒருநாள்—இரவு! நல்ல இருட்டு, மழைவேறு சிறு தூறலாக இருந்தது. ஒரு மாடிவீட்டு வெளியில் படுத்திருந்தேன். நான் படுத்திருந்த திண்ணையின் எதிர்ப்புறத்தில் ஒரு ஆசாமி தூங்கிக்கொண்டிருந்தான்.

நேரம் வளர்ந்துகொண்டே போயிற்று. திடீரென்று

நான்கைந்து தடியர்கள் அவனைத் தாக்கினர். அவன் 'ஐயோ கொள்ளை, கொள்ளை, ஐம்பதினாயிரம் போச்சே, திருடர்கள் எடுத்துச் செல்லலாச்சே' என்று ஒப்பாரியிட்டான். அந்தத் தடியர்கள் மாடிவீட்டின் உட்புறமாகவே ஓடினர், எனக்குச் சந்தேகம். ஆகவே சத்தமின்றி அவர்கள் பின்னாலேயே சென்றேன், அந்த வீட்டுக் குடையான் வெளிச்சத்தில திருடிவந்த பணத்தை எண்ணிக்கொண்டிருந்தான். எனக்கு ஆத்திரம் எல்லையைக் கடந்துவிட்டது.

" அடே, திருட்டுப்பயலே " என்று கூவினேன். அவ்வளவுதான்; என்னைப் பிடித்துக் கட்டிப் போட்டு விட்டார்கள்.

"விடிந்தது. வீட்டில் ஒரு பெண்—பதினைந்து வயது நிறைந்த பக்குவமான பாவை—என்னைப் பார்த்தாள்."

" ஆ, நாதா அந்த ஆள் நீங்கள்தானா? "

" ஆமாம் நானே தான்! "

" அன்று உன் கண்களிலே வழிந்த கனிவை, உன் உதடுகளிலே ஒழுகிய தேனினிமையை என்னால் என்றுமே மறக்க முடியுமா? என்னை எவ்வளவு பரிவோடு விசாரித்தாய். தப்பியோட வழி செய்வதற்குள், அந்த முரடர்கள் போலீசிடம் பிடித்துக் கொடுத்து விட்டார்கள். சிறை வாழ்வு முடிந்ததும் நேராக உன்னைத் தேடியோடி வந்தேன், நல்ல வேலை கிடைத்தாய் "

" காதலா, கதை வெகு சுவாரஸ்யமாக இருக்கிறதே! "

" இன்னும் முடியவில்லை, இருளிலேயே இருளாய் இருந்து இன்பந்தரும் எழிலணங்கே, சிறையிலே நான்

ஒரு சிந்தனைசாலியானேன் வெளியில் சென்றால் என்ன செய்வது என்று யோசித்தேன்—இரவு, பகலென்று பாராமல்! உழைக்க மனமிருந்தும், உழைப்பையேற்று ஊதியம் தர ஒருவரும் முன்வரவில்லை. பணத்தை வைத்துப் பூட்டுகிறான், ஒருவன், பசியோடு ஒருவன் ஒட்டிய வயிற்றை காட்டுகிறான். பட்டாடையுடுத்தி, பகட்டான வாழ்வு வாழ்கிறான் ஒருவன், பழைய கிழிந்த கந்தலின்றி அழுகிறான் மற்றொருவன், விருந்துண்டு செரிக்க மருந்துண்கிறான் ஒருவன், விலாவலிக்கச் சோற்றுக்குக் கூவுகிறான் வேறொருவன். ஏன்? ஒருவனது சொந்தத் தேவைக்குமேல், அவனிடம் பொருள் ஏன்? இப்படித் தத்துவங்களில் தத்தி விளையாடிக்கொண்டிருந்தது என் மனம். கடைசியில் என்னையே ஒருமுறை உற்றுப் பார்த்தேன். 'வாட்டசாட்டமான' உடலைக்கண்டு பூரித்தேன்—சரியென்று தலையை ஆட்டினேன். வெளியில் வந்தேன். இந்தத் திருடர் இராஜ்யத்தை ஏற்படுத்தி விட்டேன்'' என்றான் சிங்காரம்.

"இந்த இராஜ்யம் நிலைக்குமா? சுவாமி!" என்றான் அவன், சந்தேகத்தோடு!

"நிலைக்காதுதான்—நிலைத்து இருக்கவும் கூடாதுதான் இலாபம் என்பதே பகற்கொள்ளையென்று சொல்கிறார்கள் பொருளியல் புரட்சிக்காரர்கள். அப்படிப் பார்த்தால் வணிகன், வக்கீல், மனிதனைப் பிறந்தவன் ஒவ்வொருவனும் கொள்ளையடித்துக் கொண்டிருக்கிறான் என்றுதான் அர்த்தமாகிறது. இந்த இராஜ்யத்தை அழிக்க ஒரு அணுகுண்டு இருக்கிறது, அது பொருளியல் சமத்துவம்—இல்லையென்று ஒருவன் ஏங்குவதும், அதிகம்

குவிந்திருப்பதை நாளும், அயலான் கொண்டுபோய் விடுவானோ என்று அஞ்சி அஞ்சித் தூங்குவதுமான நிலையை ஒழிக்கும் நேர்மைத்திட்டம் அது!''

"சரி, சிங்காரி நீ, தூங்கு இன்று என் கடைசிப் படையெடுப்பு—போய்விட்டு வந்து விடுகிறேன்'' என்று கூறிக்கொண்டே நடந்துவிட்டான், அவள் விடையை எதிர்பார்க்காமலே.''

*   *   *

சீமானின் மாடிவீட்டினுள் கொஞ்சமும் அச்சமின்றிச் சென்றான், தன்னந் தனியாக. ஒரு அறையினுள் நுழைந்தான். அங்கு ஒரு சிறுவன் தூங்கிக்கொண்டிருந்தான். கைகளைத் தட்டினான், இலேசாக. அவனது ஆட்களில் இருவர் வந்தனர். அந்தச் சிறுவனைத் தூக்கிக் கொண்டு போய்விட்டனர்.

சீமானின் அறைக்குள் நுழைவதற்குள் இரண்டு வேலைக்காரர்கள் விழித்துக்கொண்டு ஓடி வந்தனர், எதிர்த்தனர். இரண்டொரு நிமிடங்களில் அடி தாங்காமல் மடங்கி, மயங்கி விழுந்துவிட்டனர். இந்தச் சச்சரவு நடக்கும்பொழுதே சீமான் விழித்துக்கொண்டார். அவரால் எதையும் செய்ய முடியவில்லை.

"விசாரணைக்கு வந்து சேரவேண்டும், திருடர்கள் இராஜ்யத்திற்கு! உம்......... புறப்படு, உடனே'' என்றான், கடுமையான குரலில்!

சிங்காரத்தின் திருட்டுச் சிங்கங்கள், அகப்பட்டவரைச் சுருட்டிக்கொண்டு புறப்பட ஆயத்தமாகி விட்டனர்.

இருள் மாதேவிக் கோயிலின் வழியாக வரும்பொழுது சீமான், நடுநடுங்கிய குரலில் கேட்டார். சிங்காரம், இடி முழக்கம்போலச் சிரித்தான்.

"என்னை, என்ன செய்யப் போகிறீர்கள்?"

"விசாரிக்கப் போகிறோம்!"

"திருடர்கள் நீங்கள், பறிகொடுத்தவனை விசாரிப்பதா?"

"உம், வாயை மூடும்; நாளை வழக்கு மன்றத்திலே கேளும் இந்தக் கேள்வியை!" என்றான் சிங்காரம்.

சீமானைக் கொண்டுபோய் ஒரு சிறையில் தள்ளிவிட்டு அவரவர் இடங்களுக்குச் சென்றுவிட்டனர்.

* * *

வழக்கு மன்றம் வழிய வழிய மக்கள் கூடியிருந்தனர். வீரர்களும், விவேகிகளும் நிறைந்திருந்தனர். சிங்காரம் வந்து சிங்கார ஆசனத்தில் அமர்ந்தான். அவன் தேவியும் வந்தாள்.

"கொண்டுவா, குற்றவாளியை!" என்று கட்டளை பிறந்தது. ஆள் பறந்தான்.

சீமானை இழுத்து வந்தனர்.........

"ஐயோ........" கூவினாள், இராணி. சிரித்தான் மன்னன் சிங்காரம்.

"அவர் என் தந்தை வஞ்சகப் பிள்ளை!" என்றாள் அவள்.

"தந்தையாக இருக்கட்டுமே—தவறு செய்தவரை

விட்டுவிட முடியுமா? இது விசாரணை மண்டபம். ஞாபகமிருக்கட்டும்" என்று கடிந்துகொண்டான்.

குற்றப் பத்திரத்தை ஒருவன் படித்தான்...... இந்த வஞ்சகப் பிள்ளையின் பழைய நாள் சரித்திரத்தில் ஒரு ஏடு கூறும் கதை இது. ஐம்பதினாயிரம் ரூபாய் பணத்துடன் வந்த ஒரு வழிப்போக்கன் உதவி கேட்டபோது, வீட்டிற்கு வெளித்தாழ்வாரத்தில் படுத்திருக்கச் செய்து, நள்ளிரவில் ஆட்களை ஏவி, அதனை எடுத்துக்கொண்டார். இதை எதிர்த்த பிச்சைக்கார சிங்காரம் என்ற இளைஞனே அந்தக் கொள்ளையை நடத்தியதாக நிரூபித்து அந்த வாலிபனுக்கு நல்லதொரு எதிர்காலத்திற்கு வழியமைத்தார் என்பதைப் பாராட்ட, இந்த தேசத்தவர் கடமைப்பட்டுள்ளனர். ஏன்? நம் தேசத்து மன்னர் சிங்கார பூபதி அந்தப் பழையப் பண்டாரச் சிங்காரமே!"

"ஆ, ஆ........"

எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

குற்றப் பத்திரத்தின் மற்ற பகுதி...... பணத்தைத் தனி மனிதன் தேவைக்குமேல் சேர்த்து வைத்தது, இல்லாதவர் கேட்டபொழுது எடுத்துக் கொடுக்காமல் இழுத்துப் பூட்டியது, இத்தேசத்து மன்னர் படையெடுத்தபொழுது உடுத்தது, எதிர்த்து உரையாடியது...... அவன் படித்து முடிக்கவில்லை.

"போதும்—நிறுத்து! வஞ்சகப் பிள்ளையே, இதோ என் அருகில் இருப்பவள் உமது மகள் சிங்காரி"

"அப்படியா!"

"தந்தையே, மன்னிப்புக் கேட்டு விடுங்கள்"

"எதற்காக அம்மா, விசித்திரமாக இருக்கிறதே யோசனை—நான் திருடவில்லை, திருட்டுக் கொடுத்தவன்."

"நீர் சேர்த்து வைத்ததால்தானே திருடவேண்டும் என்ற எண்ணம் வந்தது. அது பெருங் குற்றம்."

"அந்தக் திருடனும் உழைத்துச் சேர்ப்பதை யார் தடுக்கிறார்கள்?"

"உழைக்க யார் இடந்தந்தார்கள்?"

"வேலை கொடுக்க முடியவில்லை!"

"அது கிடக்கட்டும், நீர் தனி ஆள்—மனைவியில்லை. மகளோ மறைந்துவிட்டாள். மகன் மட்டும் உண்டு. இதற்கு ஏன் உமக்கு அவ்வளவு சொத்து?"

"என்னைக் கேட்காதீர்கள் இந்தக் கேள்வியை—என்னைப் படைத்த ஆண்டவனையே கேளுங்கள்."

"அந்த ஆண்டவன் அப்பொழுது வடிகட்டின......! ஒருவனை உல்லாசமாக இருக்கவும், மற்றொருவன் உஞ்சி விருத்தி எடுக்கவும் வேண்டுமென்று ஏன் படைத்தான்..."

"மன்னிக்கவேண்டும், மன்னா! உங்கள் குற்றச் சாட்டுகளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. தண்டனை யிருந்தால் சொல்லிவிடுங்கள். ஏற்றுக்கொள்கிறேன்."

"தண்டனை—உண்டு, உண்டு, தாராளமாக! என்னைச் சிறைக்கு அனுப்பினீர்கள், ஒரு குற்றமும் புரியாம லிருக்கும் பொழுதே. அதனால்தான் இந்த இராஜ்யத் திற்கு மன்னனானேன். அந்த உதவிக்காக, நான் ஒரு பேருதவி செய்யப்போகிறேன்!"

"அடடா, கொண்டுவா அந்தச் சிறுவனை."

சிறுவன் வந்தான்.

"என் தம்பி ஏகாம்பரம்!"

"சிங்காரி! உன் தம்பி மட்டுமா, என் மைத்துனன்"

"மாமனாரே, ஆச்சரியமாக இப்படி ஏன் பார்க்கிறீர்? இவனை எங்கள் கள்ளக் கல்லூரியில் சேர்க்கப் போகிறோம். உமது குற்றத்திற்கு ஒரு தண்டனை. நானும், உம்மகள்—ஆம், என் மனைவியும் வானப் பிரஸ்தம் கிளம்பப் போகிறோம், இந்த நாட்டைவிட்டே! அதற்கு உமது தேசத்தில் ஒரு நல்ல தொழில் செய்ய வழி காட்டவேண்டும்"

"சிங்கார பூபதியாரே, எனக்கு அளித்த தண்டனையை ஏற்கத் தயார்—இன்றே, இப்பொழுதே! தண்டனையை எப்பொழுது நிறைவேற்றுவது?" சீமான் கூவினார். அந்த வழக்கு மண்டபம் அமைதியை அணைத்துக்கொண்டது!

## 2

சீமான் வஞ்சகம் பிள்ளை தனி இடத்திலே நின்று யோசித்தார், அவருக்குச் சிரிப்பும் வந்தது.

திருடர்களுக்கு ஒரு இராஜ்யமாம்—அதற்கு ஒரு மகாராஜா! அங்கே ஒரு சீமானின் விசாரணை, அவனுக்குத் தண்டனை! வஞ்சகப் பிள்ளையின் வாழ்வில் இம் மாதிரிச் சம்பவம் வருமென்றே எதிர்பார்க்கவில்லை. ஆனால் சம்பவம் நிகழ்ந்துவிட்டது!

அது மட்டுமா? அவரது காணுமற்போன மகள் அங்கே! மகனும் இருக்கிருன். திருட்டு ராஜா அவரது மருமகப்பிள்ளை! அத்தனையும் அவருக்கு ஆச்சர்யத்தை அள்ளி வீசிக்கொண்டிருந்தன.

சிங்காரம் கேட்ட கேள்விகள் அவர் இதயத்தை ஈட்டிகள்போலத் தாக்கின—அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை! அவன் கேட்ட கேள்விகளுக்கு நேரான பதிலுரைகளைத் தந்துவிட வேண்டும் என்று பெரு முயற்சி செய்து பார்த்தார். முடியவில்லை.

சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வு ஏன் என்கிருன். அத்துடன் விடுவதாக இல்லை. ஆண்டவன் விதியென்ருல் அந்த ஆண்டவனே...... என்கிருன். இரந்து உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகியற்றியான் என்று அறிஞர் ஒருவர் கூறியதாக ஒருநாள் கேட்ட நினைவு—சிங்காரம் பலே கள்ளன் மட்டுமல்ல—மகா அறிவாளி!

ஒருவன் சேர்த்து வைக்கிருன். இன்னொருவன் சோற்றுக்கழுகிருன். இந்த நிலை வளர்ந்தால் இல்லாதவன் இருப்பவனிடம் எடுக்கத்தானே தூண்டும்! அவன் தடுப்பானே என்பதற்காக மறைந்து ஒளிந்து எடுக்கிருன்—இரவில்! இது திருட்டாம்—அகராதியோடு செத்து மடியட்டும் அந்த எழுத்துக் குப்பை என்று பேசிவிட்டானே!

மேலும், அவர் மனம், அவரையே இடித்து இடித்துக் கேட்டது......

அவன் செய்வது திருட்டு என்றால், நான் பணம் படைத்தவனாக மாறியது எவ்வளவு பெரிய 'திருட்டுவேலை தெரியுமா? எத்தனை ஏழைகளை வாட்டி வதக்கி, அவர்களின் உழைப்பை உறிஞ்சி, வயலை வளமாக்கி, நெல் மணிகளைச் சேர்த்திருப்பேன். கடன் கொடுக்கிறேன் என்று கூறி வீடுகளை, நிலங்களை ஏலம் எடுத்திருப்பேன். இத்தனையும் போதாமல், கொள்ளையே அடித்தேனே. நான் மட்டும் எப்படித் திருடனில்லாமல் இருக்கமுடியும்? திருடனின் மாமனார்தானே!......

இப்படிச் சிந்தனை ஓடிக்கொண்டிருந்தது.

அப்பொழுது சிங்காரி வந்தாள். தன் தந்தையைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுதாள்.

"தந்தையே, உங்களை இன்றுவது காணும் பாக்கியம் கிடைத்ததே—பெருமகிழ்ச்சி கொள்கிறேன்" என்று இன்பத்தால் வார்த்தைகள் திணறிடப் பேசினாள்.

"மகளே—மட்டற்ற மகிழ்ச்சி, நீ ஒரு அறிவு மகனின் அருகிலிருக்கும் காட்சியைக் காணும்பொழுது!"

"அவர் ஒரு திருடன் அப்பா" என்றாள், குறும்பாகச் சிரித்தபடி!

"ஆம், திருடன்தான்—என்னிடமிருந்த பெண்ணை, பொன்னை, பிள்ளையை மட்டுமல்ல—வஞ்சகப் புத்தியை, சூது மதியை, சூழ்ச்சித் திறத்தை—அத்தனையும் திருடித் தூக்கி யெறிந்துவிட்டான். எனது கஞ்சத்தனத்தை, 'கழிசடைக்' குணத்தையும் களவாடிக்கொண்டு போய்க் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டான். சிங்காரம் திருடன். ஏன்? என்றால் திருடனுனன். என்னைப்

போன்றவர்களால் திருடனுனன். அதுவும் குற்றம்புரியா ஒருவனைக் குற்றவாளியாக்கினேன், ஆகவே அவன் சரி, இனி குற்றம் புரிந்தே வாழ்வோம் என்று இந்தத் திருடர் இராஜ்யத்தை ஏற்படுத்திவிட்டான். உடலுக்கு ஏற்ற உழைப்புத் தரவேண்டும், ஒவ்வொருவனும்—அவன் உழைப்பிற்கேற்ற ஊதியம் பெறவேண்டும்—தேவைக் கேற்ற அளவு அவன் சேர்த்துக்கொள்ள வேண்டும்—என்று நாடு கூறியிருந்தால் இந்த இராஜ்யம், பூஜ்யமாகியிருக்கும்! அந்த நிலை பிறக்க விடவில்லை, என்னைப் போன்றவர்கள்! ஆகவே, அவன் புரட்சிப் பாதையில் இறங்கிவிட்டான். எதனைச் சமூகம், குற்றம் என்று கூறுகிறதோ, சாஸ்திரமும், மற்றவையும் பாவமென்று பேசுகிறதோ அதனைப் புரியவே ஒரு மக்கள் கூட்டத்தைத் தயார் செய்துவிட்டான். குற்றம் எங்கள் மீது தானம்மா"

"தந்தையே, நீங்கள் தானே பேசுகிறீர்கள்!" வியப்போடு கேட்டாள்.

"அவன் கொடுத்த தண்டனையே என்னை மிகவும் வாட்டுகிறது—உடலையல்ல, உள்ளத்தை! ஒழுங்காக தொழில் செய்ய ஒரு வழிவேண்டும் என்றுனே—ஐயோ, நான் அழுகிறேன். இந்த மாதிரி எத்தனை வைரங்கள், மாணிக்கங்கள் உள்ளனவோ இந்தப் பூமியில்!" என்று உணர்ச்சியோடு பேசிக்கொண்டிருக்கும்பொழுது சிங்காரம், ஏகாம்பரத்தோடு அங்கு வந்தான்.

"மாமா தண்டனையை நிறைவேற்றும் நாள் நெருங்கி விட்டது. ஏற்கத் தடையில்லையே!" என்றுன்.

"இன்றே ஏற்கிறேன். நீ தந்தது சிறு தண்டனை. இந்தத் திருடர் இராஜ்யத்தை இனி திருந்திய இராஜ்யம் என்று அழைப்போம். இங்கு ஆலை வைப்போம். அத்தனை பேருக்கும் வேலை தருவோம். நீ அதற்குத் தலைவனாக இரு. நான் அந்தக் காட்சியைக் கண்டு—ஆனந்தக் கண்ணீர் விட்டுக்கொண்டே—அழுதுகொண்டே இருக்கிறேன்."

"உங்கள் நெஞ்சுறுதியைப் பாராட்டுகிறேன். தண்டனையை இவ்வளவு பெரிய அளவில் ஏற்கும் துணிவு வந்ததே, உங்களுக்கு, அதைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். ஆனால் அதுதானே முடிவு—அது வர, வேண்டுமானால் அதிக நாட்கள் ஆகலாம். ஆனால் ஒரு நாள் வந்துதானாக வேண்டும்! இப்படி சீமான்கள் இராஜ்யம் தீர்மானம் போட்டுவிட்டால் திருந்திய இராஜ்யம் வளம்பெருகி வாழும்" என்றான்.

திருடர்கள் இராஜ்யத்தை விட்டு திருந்திய இராஜ்யம் அமைக்க அவர்கள் நடந்துகொண்டேயிருந்தனர்—இருட்டிலிருந்து, ஒளிக்கு—திருட்டிலிருந்து, தெளிவுக்கு—குற்றத்திலிருந்து, நற்குணத்திற்கு!

# 3

பகுத்தறிவு இராஜ்யத்திலிருந்து புறப்பட்டுச் சென்றேன். திருந்திய திருடரின் பூமியிலே ஏற்பட்டுள்ள மாற்றங்களை நேரில் காணலாம் என்ற பேரவா என் இதயத்தை உந்த உந்த என் நடையிலே வேகம் அதிகமிருந்தது. நான் நடந்து போய்க்கொண்டே இருந்தேன்.

இரயிலடிக்கு அருகில் வந்துவிட்டேன். அங்கு ஏராளமாக மக்கள் குழுமியிருந்தனர். இரவு நேரம் ஆகவே நிம்மதியாக உறங்கிக்கொண்டிருந்தனர். ஒருவராவது தங்கள் பக்கத்திலே உள்ள மூட்டை முடிச்சுகளைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. சிலர் இப்படியப்படி நடந்து சென்றுகொண்டிருந்தனர். உருண்டு கிடந்த மூட்டைகளை உரிமையாளர் பக்கத்தில் எடுத்து வைத்துவிட்டுப் போய்க்கொண்டிருந்தனர். எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

இன்னும் சிலர் டிக்கட்டுகள் வாங்க முயற்சி செய்து கொண்டிருந்தனர். ஒழுங்கான வரிசையில் அவர்கள் காட்சியளித்தனர். அவர்களில் யாரும் பணங்கொடுக்கவில்லை. பெயர், ஊர், இருப்பிடம் என்ற விபரத்தைக் கூறிக் கையொப்பமிட்டனர். பிறகு அவர்கள் போக வேண்டிய ஊருக்கு டிக்கட் பெற்றுத் திரும்பினர்,

உள்ளே நுழைந்தேன்—அங்கு ஒரு பெரிய உணவுக் கடை இருந்தது. அதில் ஏதாவது சாப்பிடலாம் என்று பார்த்தேன். அங்கு யாரும் பணங்கொடுத்து எதுவும் வாங்குவதாகத் தெரியவில்லை. அவரவர் போவதும், வேண்டியதை வாங்கி யுண்பதும் வெளியேறுவதுமாகவே இருந்தனர். எனக்கு அகோரமான பசி—எதையாவது தின்று தீர்க்கவேண்டும் போலிருந்தது! உடனே என் பையிலிருந்து நாணயங்களை எடுத்துக்கொடுத்து வேண்டியதைக் கேட்டேன். அவன் விழித்தான். பிறகு அவன் என்னை யார் என்று கேட்டான். பகுத்தறிவு இராஜ்யத்திலிருந்து வந்திருப்பவன். யாருடைய விருந்தினனாக வந்திருக்கிறேன் என்றும் அவன் அறிய விரும்பினான்.

உடனே சிங்காரம் அனுப்பியிருந்த அழைப்பைக் காட்டினேன். அவன் கொஞ்சம் வியப்போடு பார்த்துவிட்டு, நாணயங்களைத் திரும்பக் கொடுத்துவிட்டு, உணவுப் பொருள்களைத் தந்தான். உண்டேன். மகிழ்ந்தேன். மேலும் நடந்தேன்.

சிறிது தூரம் சென்ற பிறகு என் பையைத் தடவிப் பார்த்தேன். 'மணிபர்சை'க் காணோம். பயந்துவிட்டேன். இதனை எங்குபோய்ச் சொல்வது என்று புரியவில்லை. பிறகு விசாரித்தேன். ஊருக்கொரு ஆளும் நிலையக்கிளை உண்டாம். எல்லாவித குறைபாடுகளையும் அங்குதான் சொல்லவேண்டுமாம். போனேன். சொன்னேன். அவன் கடகடவெனக் கைகொட்டிச் சிரித்தான்.

“யாராவது எடுத்திருக்கக் கூடும்!” என்றேன்.

அவன் இன்னும் பலமாகச் சிரித்தான். எனக்குக் கொஞ்சம் கோபங்கூட வந்தது.

“பணம் போய்விட்டது என்கிறேன்—தாங்கள் சிரிப்பது அவ்வளவு நன்றாயில்லை!” என்றேன் கொஞ்சம் ஆத்திரத்தோடு.

“ஏன் பணம் போய்விட்டது?” என்றான் அவன் மீண்டும்.

“யாரேனும்......” என்று முடிப்பதற்குள் அவன் குறுக்கிட்டான்.

“உமது அஜாக்கிரதையினால் தவற விட்டுவிட்டு, பிறர் எடுத்து விட்டதாகக் கற்பனை செய்கிறீர்—அவ்வளவுதானே?” என்றான் சீற்றத்தோடு!

"இல்லை ..... ஆ......" என்று மழுப்பினேன்.

என்னை ஒரு இடத்தில் உட்காரச் சொன்னான். அமர்ந்தேன். அரைமணி நேரங் கழித்து ஒரு ஆசாமி வந்தான். அவன் கையில் பர்சிருந்தது. வியப்பின் உருவமானேன்.

"ஐயா, எவனோ ஒரு ஏமாளி, தன் பொருளைக் காப்பாற்றாமல் போட்டுவிட்டான்" என்று கூறியபடி அதனை வைத்துவிட்டுப் போய்விட்டான். எனக்கு வெட்கமாக இருந்தது! அந்த அரசாங்க ஆள் என்னை அழைத்தான், நான் அருகில் சென்றேன்.

அவன் ஏளனமாகச் சிரித்தான் முதலில்—பிறகு பேசினான்.

"அந்நிய நாட்டிலிருந்து வந்திருப்பதால்தான் உமக்கு இந்தப் பணம் சுமக்கும் வேலை. எங்கள் தேசத்திலே யாரும் அந்த வேலையைச் செய்வதில்லை. ஆளுவோர் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளனர். ஏமாளிகள் இருந்தால் ஏமாற்றுபவர் இருந்துதானே ஆகவேண்டும். இதில் தவறென்ன? நீர் ஏமாந்துபோய் பணப்பையை விட்டுவிட்டு எவனோ எடுத்துக்கொண்டு போய்விட்டான் என்று புலம்பினீர். வீண்பழி சுமத்தினீர். இனியேனும் நீர் ஒழுங்காக இருந்து பிறர் குற்றம்புரியும்படி செய்யாமல் உதவி புரியவேண்டும்" என்று சொன்னான். நான், மணப் பெண்ணைப்போல, தலையைத் தாழ்த்திக்கொண்டேன், தாங்க முடியாத நாணத்தால்!

பிறகும் நடந்தேன். உடை வகைகள் விற்குமிடங்களுக்குச் சென்றேன். அங்கேயும் 'ஓசி'யில் வியாபாரம்!

எங்கு திரும்பினும், பணம் இல்லாமல், வாணிபம் நடந்தபடி இருந்தது. பணத்திற்கு மதிப்பே இல்லை. என் பையிலிருந்த வெள்ளிப் பணங்கள் கேலி செய்து கொண்டிருந்தன! அந்தப் பணத்தை யாரும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை.

பணத்தைக் கண்டு 'பல்லிளித்திடும்' பண்புடைய தசைப்பிண்டங்கள் யாருமில்லை! பணத்தை ஒரு பொருளாக மதிக்கவே இல்லை.

பணத்திற்கு வேலை என்ன? பண்டமாற்றுக்கு அது இடைக்காலத் தூதுவன்—சொத்தின் மதிப்பைச் சொல்லும் ஒரு கணக்கப்பிள்ளை......... இருந்தும், திருந்திய இராஜ்யத்தில் அதற்கு மதிப்பே இல்லை.

இதற்குரிய காரணங்களை அறியவேண்டும் என்ற உள்ளத்துப் பேரிரைச்சலை என்னுல் அடக்கவே முடியவில்லை.

வழியில் யாரேனும் வந்தால், அவர்களை விசாரித்து விடவேண்டும் என்று முடிவு செய்துகொண்டு நடந்தேன்.

வழியில் ஒருவன் வந்தான்.

"நண்பரே, எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும்" என்று கேட்டேன்.

"மன்னிக்கவேண்டும். இன்று வேலைகளைப் பிரித்து, மணி குறிப்பிட்டு விட்டேன். ஆகவே உங்களுக்கு உதவி செய்ய முடியாமைக்கு வருந்துகிறேன்" என்று கூறிக் கொண்டே நடந்துவிட்டான்.

பிறகு யாரோ என்னை கைதட்டி யழைத்தார்கள். போனேன். முகமலர்ச்சியுடன் என்னை வரவேற்ருன்

ஒரு இளைஞன். சிங்காரத்தின் அழைப்பை எடுத்துக் காட்டினேன். அவன் சிறிதுநேரம் அசைவற்றிருந்தான்.

" இந்தத் தேசத்துப் போக்கு மிக விசித்திரமாக இருக்கிறதல்லவா ?" என்று கேட்டான், சிரித்துக் கொண்டு !

" ஆம், ஆம் !" என்றவுடன் அவலோடு !

" அம்மாதிரி எண்ணம் பிறக்கத்தான் செய்யும், வெளிநாட்டவருக்கு! அதற்காகத்தான் இம்மாதிரி சிறு நிலயங்களை வைத்திருக்கிறோம், நிலைமைகளை எடுத்து விளக்க, திட்டங்களைத் தெளிவாக்க !" என்றான் அவன்.

" என் சந்தேகங்களைக் கேட்கலாமல்லவா ?" என்றேன் தயக்கத்தோடு !

" தாராளமாக !" என்றான் அவன்.

" சிங்காரம் இத்தேசத்துத் தலைவனாயிற்றே—அத் தலைவனால் அழைக்கப்பட்ட எனக்கு இதுவரை வரவேற்று அழைத்துச்செல்ல ஒரு சிறு ஏற்பாடும் இல்லையே—ஏன் ? " என்றேன்.

" காரணத்தோடு—தாங்கள் இங்கு வந்தது இத் தேசத்துத் திட்டங்களை நேரில்காண ; விருந்துண்டுபோக அல்ல—ஆகவேதான் அழைக்கவில்லை. உங்களுக்குக் குறையொன்றும் வந்து விடவில்லையே !" என்றான் அமைதியாக !

" இல்லை—" என்றேன், அழுத்தமாக !

" இங்கு பணத்திற்கு மதிப்பில்லை யல்லவா ?"—எனது இரண்டாவது கேள்வி.

“பணத்திற்கு வேலை தரவில்லை நாங்கள்—ஆளு வோர், மக்களிடமிருந்து உழைப்பை வாங்கிக்கொள்கிறார் கள். அவர்களுக்குத் திரும்பப் பொருளாகத் தருவ தில்லை. வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்திசெய்து விடு கிறார்கள். பிறகு பணத்தினை ஏன் மக்கள் திரும்பிப் பார்க்கப் போகிறார்கள்?” என்றான்.

“உழைப்பு என்றால் தெளிவாகத் தெரியவில்லையே! கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல முடியுமா?” என்றேன், மீண்டும்.

“நீங்கள் கேட்பது புரிகிறது. உழைப்பு என்றால் எல்லோரும் ஒரே அளவில், ஒரே உருவில் உழைப்புத்தர முடியாது. மூளை உழைப்பாளிகளும் இருப்பார்கள். உடல் உழைப்பாளிகளும் உண்டு. அவரவர் திறமைக் கும், வலிமைக்கும் ஏற்ற அளவில் உழைப்பைப் பெற்றுக் கொள்வது—பிறகு அவர்களது தேவைக்கு ஏற்றவைகளை ஆளவந்தாரே செய்து தந்துவிடுவது” என்றான்.

விடை பெற்றுக்கொண்டு வெளியேறினேன்.

மற்றொரு ஆளுவோர் நிலையத்தில் நுழைந்தேன்.

“இங்கு போலீஸ் இல்லையா?” என்றேன் திடீரென.

“தேவையில்லை!” என்றான் அந்தத் துடுக்குக் காரன்.

“சிறையுண்டா?” என்றேன் அடுத்தபடி.

“குற்றம் புரிபவர் இங்கு இல்லை—குற்றம் புரிய வேண்டிய அவசியமும், சூழ்நிலையும் கிடையாது!” என்றான்.

நடந்தேன் மேலும்!

கடைசியாகச் சிரித்துக்கொண்டே வரவேற்ருன் சிங்காரம்.

"பார்த்து முடிந்துவிட்டதா, எங்கள் விசித்திர தேசத்தை?" என்ருன்.

"பார்த்தேன், பார்த்தேன்—பாராமல் எப்படி இங்கு வரமுடியும்" என்றேன், கொஞ்சம் சலிப்போடு.

"தங்களை அழைத்து வரவில்லை—அதற்காகக் கோபங் கொண்டிருக்கிறீர்கள்—நன்ருகத் தெரிகிறது. அப்படி நான் செய்திருந்தால் இப்பொழுது கிடைத்த அனுபவம் பாழாகப் போயிருக்கும்."

"சிங்காரம், சிறையும், படையும், தண்டனையும், நீதி மண்டபமும் இல்லாமல் ஒரு நாட்டு மக்களை எப்படி ஆள்வது?" என்றேன்.

"என் நாட்டவர் திருந்தியவர்—தீமையிலிருந்து நடந்து வந்துவிட்டார்கள்!" என்ருன் அவன்.

"இருந்தாலும்......"

"மனிதன் ஏன் குற்றம் செய்கிருன்? எண்ணிப் பாருங்கள். அந்தக் காரணங்களைக் கண்டுபிடித்தேன். அவை ஏற்படா வகையை உண்டாக்கிவிட்டேன்."

"குற்றம் புரிவது மனித இயற்கையென்பார்களே!"

"அது உங்கள் நாட்டில்—"

"ஆமாம், எங்கள் நாட்டில் குறையுள்ள மனிதர்கள் இருக்கிருர்கள்."

" அதனுல்தான், உங்கள் முயற்சியையும் மீறி அவர்களுக்குத் துணைபுரிய கடவுள்கள் கணக்கில்லாமல் வாழ்கிருர்கள். எங்கள் தேசத்தில் அவர்களுக்கு வேலையில்லை. இருள்மாதேவி ஓடிமறைந்து விட்டாள். உழைப்பு இங்கு தெய்வம்—உரிமை வாழ்வுதான் இங்கு தேவை " என்று முடித்தான் அவன்.

சிங்காரி வந்தாள்.

" தோழரே, வணக்கம் " என்ருள்.

" நம் நாட்டைப் பார்க்க வந்துள்ளார் " என்ருன் சிங்காரம்.

" பாதி பார்த்திருப்பார்... .." என்ருள் குறும்பாக.

" ஏன் ? "

இருவருமே கேட்டோம், ஒரே நேரத்தில் !

" ஆண்களின் நிலையை ஆராய்ந்திருப்பீர்கள். பெண்களைப்பற்றி எண்ணிக்கூட இருக்க மாட்டீர்களே ! " என்ருள் அவள்.

" ஓகோ " என்றேன்.

அவள் பேசினுள். அவள் குரல் மிகத் தெளிவாக ஒலித்தது.

" பெண்கள் ஆண்களோடு ஒத்த உரிமையுள்ளவர்கள். ஆனுல் தொட்டிலையும், சோற்றுக் கரண்டியையும் வெறுப்பதில்லை. விரும்பி ஏற்றுள்ளார்கள். படித்தவர்கள் !பாடாடோபத்தில் மூழ்கிப் பாழ்படாதவர்கள் இல்லறத்தில் சிறந்தவர்கள். மணத்திலே குறைபாடு

களைக் காணமுடியாது. ஆகவே, அகத்துறைக் கோளாறு களுக்கு இடமே இல்லை. விபசாரம் இந்நாட்டு அகராதி யிலே இல்லாத சொல்—புரியாத பதம்" என்றாள்.

"விருந்துண்போமா?" என்றான் சிங்காரம்.

"இதுவரை உண்டதே பெரு விருந்தாயிற்றே" என்றேன்.

"அது கருத்துக்கு!" என்றான் சிங்காரம்.

"இனி வயிற்றுக்கு—வாருங்கள்" என்று அன்போடு அழைத்தாள் சிங்காரி.

மூவரும் சென்றோம் உள்ளே.

விருந்துண்டு முடிக்கவில்லை. சிங்காரி மேலும் சில செய்திகளைப்பற்றி எனக்குத் தெளிவுரை தந்துகொண் டிருந்தாள்.

"குடும்பம் நடத்துகிறார்கள் இங்கு—மற்ற நாடுகளி லுந்தான்! கூர்ந்து கவனித்தால் பெருத்த வித்தியாசந் தோன்றும். குடும்பத் தலைவன் சம்பாதிப்பான்—தலைவி அவன் கொண்டுவரும் பணத்தை வைத்துக்கொண்டு குடும்பத்தை நடத்துவாள். பிள்ளைகள் இருந்தால், அவர் களும் இந்தத் தொகையினாலேயே தங்கள் உடல் நலத் தையும் உள்ள வளத்தையும் பெருக்கிக்கொள்வார்கள். இங்கே கணவனும் உழைப்பான். அவன் உழைப்பு மண் வெட்டி, கலப்பை உருவிலும் இருக்கலாம். இல்லை பேனாவில் எழுதிமுடிக்கும் எழுத்துக்களினுருவிலும் அமையலாம். ஆட்சியாளர் அதனை ஏற்றுக்கொள்வர்.

அவனது மனைவி வீட்டு வேலைகளைச் செய்வாள். அரசியல் பணிமனை கண்காணித்துக் கொள்ளும். ஆகவே இருவருக்கும் வேண்டிய உணவு, உடை, உறையுள், போக்குவரத்துவாகனம், பொழுதுபோக்கு இடங்கள்......எல்லாவற்றிற்கும் ஏற்பாடு செய்துள்ளார்கள். பிள்ளைகளை அளவோடு பெற்றுக்கொள்ளக் கற்றுள்ளார்கள் எங்கள் தேசத்தவர்கள். அந்தப் பிள்ளைகளைப் பற்றிய கவலையும் அவர்களுக்கில்லை. சர்க்கார் பிள்ளை வளர்க்கும் கடமையை ஏற்றுக்கொள்கிருர்கள். பிள்ளைகள் வளர வளர அவர்கள் உள்ளப்பாங்கை உணர்ந்துகொள்கிருர்கள். அதற்கேற்ற முறையில் படிப்புச் சொல்லிக் கொடுக்கிருர்கள்" என்று சிங்காரி கூறினுள்.

"குழந்தை உள்ளம், முளைத்துவரும் மூங்கிலைப்போல—விருப்பம் போல் வளைத்துக்கொள்ள முடியும். ஆனுல் அதன் இயற்கைப் போக்கு எப்படிப்போகிறது என்று கவனித்தே கல்வித் திட்டம் அமைக்கப்படும். ஒருவன் ஓவியக்காரனுகலாம். இன்னெருவன் கப்பலோட்டியாகலாம். ஒருவன் காவியம் எழுதலாம். பிறிதொருவன் பட்டாளத் தளபதியாகலாம்" என்று சிங்காரம் மேலும் விளக்கினுன்.

"ஆகவே, மனிதனை இயந்திரமாக்கி விட்டீர்கள்!"

"இல்லை—மனிதனை மனிதனுக—மாற்றியிருக்கிறோம்" என்றனர் இருவரும்.

"அப்படியா!" என்று கேட்டேன். ஆச்சர்யம் ஆட்சி புரிந்தது அந்த நேரத்தில்—என் மனதில்!

# 4

உண்டு, வெளியில் பரப்பப்பட்டிருந்த திண்டில் சாய்ந்தேன். சிங்காரம் என் அருகில் வந்து அமர்ந்தான். சிங்காரியும் அவனுடனிருந்தாள். என் இராஜ்யத்து நடவடிக்கைகளைப் பற்றிப் பேசினேன்.

எதையும் எடுத்தவுடன், யார் வாயிலிருந்து வந்தாலும், எந்தச்சமயத்தில் கூறினாலும் நம்பாதே—என்று தான் அன்னை, தன் மடியில் தவழும் குழந்தைக்குச் சொல்லித்தருவாள்—சொல்லித்தர வேண்டும் என்றேன். எங்கள் இராஜ்யம், இன்னும் உருவாகாத தேசம்—முழுவதும் அமைக்கப்படாத பூமி! அதனால்தான் சிங்காரம் சொல்கிற குறைபாடுகளிருக்கின்றன. அவைகளைக் களைந்துவிட்டால் பகுத்தறிவு இராஜ்யமும் திருந்திய இராஜ்யமும் இணைந்துவிடும் என்றுகூட ஆருடங் கூறினேன். சிங்காரம் சிரித்துக்கொண்டான்.

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் யாரோ வருங் காலடி யோசைகள் கேட்டன.

தட தட தட்.........

நடையில் வேகமிருந்தது.

"வரவேண்டும், ஆண்டி மகாராஜா" என்று சிங்காரம் எழுந்துபோய் வரவேற்றான்.

உள்ளே நுழைவதற்குள்ளாகவே, அவன் அவசரப்பட்டான். "புறப்படுங்கள், புறப்படுங்கள், போவோம்

ஆண்டி மண்டலத்திற்கு—இன்னும் இரண்டு தினங்களில் ஒரு முடிவிற்கு வரவேண்டும்" என்று கூறினன்.

"அவசரம் வேண்டாம், அன்பரே! எண்ணித் துணிக கருமம், துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு" என்று கூறினன் சிங்காரம்.

பிறகு என்னை வந்தவருக்கு அறிமுகம் செய்துவைத்தான். வந்த ஆண்டிமண்டல மகாராஜனும் எனக்கு பத்து நிமிடங்களில் நெருங்கிய நண்பனுகவிட்டான். அவன் என்னையும் அவர்களுடன் வரவேண்டும் என்று பிடிவாதம் செய்தான். நானும் மறுக்கமுடியாமல் ஒத்துக் கொண்டேன்.

பிறகு நால்வரும் புறப்பட்டோம்.

ஆண்டிமண்டலம் மிகப்பெரிய கண்டம்போல விரிந்திருந்தது. அங்கு விசித்திரமான நடைமுறைகளைக் கண்டு நான் திகைத்துப்போனேன். சிங்காரமும், சிங்காரியும் சிரித்துக்கொண்டே இருந்தனர்.

"ஆண்டி, எனக்கு இது புதிய பூமியில்லை—இங் கிருந்துதான், திருடர்கள் இராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டி, வெளியேறிச் சென்றவன்—எனக்கு எதையும் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. என் மனைவி —சீமான்கள் இராஜ்யத்திலிருந்து வந்தவள்—நண்பர், பகுத்தறிவு இராஜ்யம்—பாதிகூட அமையாத நிலை— ஆகவே அவர்கள் இருவருக்கும், நாம் இருவரும் எடுத்து விளக்குவோம்!" என்முன் சிங்காரம்.

எதிரில் இரு கோயில் குருக்கள் வந்தார்கள். "இவர்கள் யார் தெரியுமா?" என்ற கேள்வியோடு தொடங்

கிறன், ஆண்டி, தன் பேச்சை! அவன் கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் என் இதயத்தின் கதவுகளைத் தட்டித் தட்டி ஓய்ந்தது!...... "இவர்களும் எங்கள் மண்டிலத்தைச் சேர்ந்த மகானுபாவர்கள் தான்!—மற்றவர்களுக்கும் இவர்களுக்கும் பெருத்த வித்தியாசம் உண்டு. இந்தக் குருக்களும் ஆண்டிப் பண்டாரங்கள் போலத் தான்—ஆனால் கொஞ்சம் கைமுதல் உள்ளவர்கள். தந்திரம் என்ற ஒன்றைக்கொண்டு தங்கள், ஆண்டித் தொழிலை மிக அதிகாரத்துடன் நடத்திக் கொள்ளுகிறார்கள். பிறர் மனதிலே குடையப்பட்டுள்ள நம்பிக்கை குகையினுள் மறைந்து கிடக்கும் மட்டரக எண்ணங்களை எப்படியோ அறிந்துகொண்டு, அவைகளை உபயோகித்து ஆசானகவே வாழ்கிறார்கள். பிச்சை கொடுக்கிறோம் என்ற எண்ணமின்றி அடிவருடியாகவே வாழ்கின்றனர் மக்கள். அப்படியே எல்லாரும் மாறிவிடலாம் என்றாலோ பிறப்பு என்ற பெருந்தடையொன்று குறுக்கிடுகிறது!"... என்றான் அவன்.

"இதோ 'வெள்ளையும் சள்ளையும்' மாட்டிக்கொண்டு போகிறான்—இவன் யார்?" என்றேன்.

"இவனும் 'கௌரவ பிச்சை' தான்!...... வெறும் வெட்டிப் பேச்சும், சில 'காமவிவகார' ஸ்தலங்களின் அனுபவமும் உண்டு. அதைக் கைமுதலாக்கி, தனது பிச்சைக்கார பிழைப்பை 'பிகுவுடன்' நடத்திக் கொள்

கிறுன். அவன் இலாப நஷ்டக் கணக்கில், மானந்தான் நஷ்டம்!'' என்றுன் சிங்காரம்.

அடுத்தபடி ஆண்டி பேசிக்கொண்டே எங்களை அழைத்துப் போனுன்.

"எங்கே?" என்றேன்.

"வந்தால் தெரியும்!" என்றுன் ஆண்டி.

"விளங்கச் சொல்லவேண்டும், பண்டார பூபதி யாரே!" என்று கேட்டுக்கொண்டேன்.

அவன் சொன்னுன், விளக்கமாக, பிறகு!

"பகுத்தறிவு தேசத்து நண்பரே, ஆண்டி மண்டலத்துப் போலிப் பிரஜைகளை இப்பொழுது கண்டீர்கள்—இனி உண்மையான குடிமகன் ஒருவனைக் காட்டுவேன்—அவனது ஒருநாள் அலுவல்களையும் பார்க்கவேண்டும் நீங்கள்!" என்றுன்.

நால்வரும் நடந்தோம்.

ஒரு சாவடி—ஒருவன் சாம்பலைக் குழைத்து மேலெல்லாம் பூசிக்கொண்டிருந்தான். அவன் நண்பன் ஒருவன் தன் கைகளில் பழந்துணியைக் கட்டி ஏற்கனவே தயாராக இருந்த வாழைப் பழத்தைக் குழைவாக்கிப் பூசினுன்—அதன்மீது சிகப்பைத் தெளித்தான்.

"சாம்பசிவம்—புறப்பட்டாச்சா?" என்றான் அந்த ஈமொய்க்கும் கையான்.

"ஆமாமப்பா, சோம்பநாதா?" என்றான் அவன்.

இந்தக் காட்சியைக் கண்டதும், ஆண்டி; தனது மண்டலத்தில் மீண்டிக்கிடக்கும் உண்மைகளைச் சொல்லத் தொடங்கினான்......

"ஆண்டி மண்டலம்—இங்கு வாழ்வோர் அனைவரும் வேதனை வடிவங்கள்—உழைக்க முடியாதவர்களும் உண்டு, உழைக்க பயப்படுபவர்களும் உண்டு. உழைக்க மனமிருந்தும் மார்க்கமில்லாது தவிப்போரும் அனந்தம்—வறுமையின் இரும்புப் பிடியில் அகப்பட்டோரே அனைவரும்—ஆனால் சோம்பித்திரியும் சோணாசலங்கள் சிலர் இருக்கலாம்—அதைக் கொண்டே எங்கள் மண்டிலத்து 'மாண்புகளை' மறந்துவிடக் கூடாது.

சோம்பநாதன்—உண்மையில் உழைக்க அஞ்சியவன்—சோம்பேறி! கண்டனத்திற்குரியவன். ஆனால் சாம்பசிவம் அப்படிப்பட்டவன் அல்லவே அல்ல—அவனது நடவடிக்கையைத்தான் இன்று கவனிக்கப் போகிறோம்.

சிங்காரம் வேடிக்கையாகச் சொன்னான்,—"சாம்பசிவம் என்வர்க்கம், என்கூட்டாளி, நான் வேறு தேசம் போய்விட்டேன், அவன் இன்னமும் இங்கேயே இருக்கிறான்" என்று!

சாம்பசிவம், சட்டியைக் கையிலேந்தி, வாயில் வந்ததை உளறிக்கொண்டே ஒவ்வொரு வீட்டு வாயிற் படியிலும் நின்முன்.

ஒரு வீட்டில்......

“ஏண்டா, தடிமாடாட்டமா யிருக்கே, எங்கே யாவது வேலை செய்து சாப்பிடுவதுதானே !”

“எங்கேயாவது .....ன்னு நீட்டாதே ஐயா...... எங்கேன்னு சொல்லு, வேலை செய்கிறேன்.”

சாம்பசிவம் நடந்தான்.

மற்ருெரு வீட்டில்.........

“ஆள் மட்டும் வாட்டசாட்டமாக வளர்ந்துட்டே, பிச்சை கேக்க மட்டும் வெட்கப்படல்லே.....”

“வேணமட்டும், வெட்கமிருக்கு--வயிறு வெட்கப் பட மாட்டேன்குதே !”

“எடுப்பது பிச்சை, வாயைப்பாரு, வாயை ! ஒரு முழ நீளம்......”

அவன் போய்க்கொண்டேயிருந்தான். எங்கும் ஒரு பிடி சோறு போடுவாரில்லை. அவன் இதயம் இறுகிக் கொண்டே வந்தது.

சத்திரத்தில் நோயோடு போராடிக்கொண்டு படுத்திருந்தாள் அவன் மனைவி சாகாவரம் பக்கத்தில் அவன் குழந்தை படுத்திருந்தது. இவர்களைக் காப்பாற்றவேண்டும். அதற்காகத்தான் அவன் வீடுவீடாய்ப் போய் நின்று பிச்சை கேட்டான். எச்சல்களை மட்டும் வாங்கிக் கொண்டு திரும்பினான்.

நான் கேட்டேன்—"இவன்தான் பிச்சை யெடுக்கிறானே, இவனுக்கு ஏன் பெண்டாட்டி, பிள்ளை" யென்று ஆண்டிக்கு கோபமே வந்துவிட்டது. 'அவனும் மனிதன்!' என்றான் அழுத்தந் திருத்தமாக! நான் வாயடைத்துப் போனேன்

சாம்பசிவம் திண்ணையிலேயே உட்கார்ந்துவிட்டான்—அவன் சிந்தனைச் சிலையானான். ஆடவில்லை—அசையவில்லை! பகல் பிச்சைக்கும் எழுந்திருக்கவுமில்லை.

இரவு வந்தது—அவனுக்கு எங்கிருந்தோ தெம்பும் வந்தது. எழுந்து அவன் மனைவி அந்தத் திண்ணையில் கிழிந்த துணிமூட்டைகளால் கட்டியிருந்த மாளிகைக்குச் சென்றான்.

"சாகா, என்னுடன் புறப்படு—ஒரு வீட்டில் விருந்து!" என்றான்.

"எங்கே, தருமம் செய்கிறாங்க"—என்றாள் அவள்.

" தருமம்—ஹி......ஹி...... தெரியாத உலகில் ஒரு நிலைபெற நமக்குச் சோற்றைக் கொட்டுகிறார்களாம்! எதையோ சொல்லி ஏழை எளிதுகள் வாழ்ந்தால் சரி—நீ புறப்படு போகும்பொழுதே சொல்கிறேன்" என்றான்.

" அடி, சாகா, தருமம் என்ற வார்த்தையே ஒழிய வேண்டும். இல்லாதவன் ஒருவனும், இருப்பவன் ஒருவனும் உலகில் வாழ்வதால்தான் இவன் கொடுக்க, அவன் வாங்கவேண்டிய நிலையிருக்கிறது!" என்றான். அவன் மனைவி ஒன்றும் புரியாமல் விழித்தாள். இவர்களின் உரையாடலைக் கலைக்க வேண்டுமென்றே இடுப்பிலே இருந்த குழந்தை அழுதது!

"எங்கே, விருந்து?" என்றாள்.

சிங்காரியின் கண்களில் நீர் வடிந்தது. சிங்காரம் மட்டும் சிரிக்கிறான். அவன் எப்படித்தான் அத்தகைய மனநிலையை ஏற்படுத்திக்கொண்டானோ, தெரியவில்லை!

சாம்பசிவம், கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையானான்.

" விருந்தாடி நமக்கு! இந்த உலகில் இனி விருந்தில்லை —நாம் போவோம் எமபுரிக்கு—அங்கு போய் நிம்மதியாக வாழ்வோம்" என்று கோரச் சிரிப்பை வீசினான்.

சாகாவரம் திகைத்துப் போனள்.

"நீ பிறந்த மண்ணிலே, நீ உண்ண ஒரு கவளம் சோறில்லை—இதற்கு மட்டும் பெயர் இருக்கிறது புண்ணிய பூமி யென்று! இந்தப் படுநாச பூமியை விட்டு பரிபூரணமான அமைதி அரசோச்சும் நாட்டிற்குப் போவோமடி—சாவை நோக்கி நடப்போம்—சாந்தம் அடைவோம் அங்கு, சந்தோஷம் பெறுவோம்" என்ருன்.

"ஐயோ......சாகவா?" என்ருள் அவள்—கேட்க பரிதாபமாக இருந்தது அவள் குரல்

அவர்கள் கடற்கரையை அடைந்துவிட்டார்கள். எதை யெதையோ பேசினர். அங்கு இருள் சூழ்ந்துகி..ந் தது. மனித நாற்றமே இல்லை.

சாம்பசிவம் தழுவினுன், தன்மனைவியை—அவன், குழந்தையை அணைத்துக்கொண்டாள்—முழுகினர், கடலில்! விட்டதா, கெட்ட சமூகம்—இல்லை, இல்லை!

பீ...பீ......பீ.........

விசிலடிக்கும் சத்தங் கேட்டது. ஊர்ப் பாதுகாவலர் வந்தனர். அவர்களைக் காத்தனர் — கைதுசெய்தனர். சாகவும் விடவில்லை—வாழவும் விடவில்லை இந்த உலகம்!

ஆண்டி பேசினுன்—"இதுதான் எங்கள் மண்டிலத்து நிலை மக்களின் நிலை—இப்பொழுது என்ன சொல்கி

நீர்கள்? திருந்திய இராஜ்யத்துடன் இணைந்துவிட வேண்டியதுதானே?'' என்று!

"சரி, கவனிப்போம்" என்றான் சிங்காரம்.

திருந்திய இராஜ்யத்துடன், ஆண்டி மண்டிலமும் இணைந்துவிடத் துடித்தது. இதைக்கண்ட பகுத்தறிவுலகம் பாராட்டுரை கூறிற்று!




